## 16

# மனிதர்கள்

**சா**தாரணமாக அவன் சென்னைக்கு வரும்போதெல்லாம் அவள் கூட வரமாட்டாள். சென்னைக்கு அவன் தன்னந்தனியே காரில் செல்லும்போது, விழுப்புரம், மதுராந்தகம், செங்கல்பட்டு என்று வேலை நிமித்தமாய் மண்டகப்படி செய்துகொண்டே போவதும், சென்னையில் தன் உறவினர் வீட்டில் அவளை இறக்கி விட்டுவிட்டு, அவன் மட்டும் வேலைகளைக் கவனிக்க வெளியில் போகும்போது, அந்த உறவினர்களின் வெட்டி, டம்ப, வம்புப் பேச்சு இவளுக்கு அறவே பிடிக்காததாலும், இவள் அவனோடு அடிக்கடி போகாமல், தீராது, போய்த் தீர வேண்டும்—கல்யாணம், அது இது—என்ற நிர்பந்தத்தின்போது, சென்னைக்கு வரும் பழக்கத்தைக் கொண்டிருந்தாள். அவள் வடக்கே பிறந்து வளர்ந்த வள். அவளுக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள் எல்லோரும் வடக்கேதான் இருந்தார்கள். கல்யாணமாகி ஆறு ஆண்டுகளாக மட்டுமே தென்இந்திய நகரில் வாழும் அவளுக்கு, சென்னைமேல் அலாதி பாசம், பிடித்தம் இல்லாததில் ஆச்சரியம் இல்லை.

ஆனால் இந்த முறை அவன் கிளம்பினபோது, ‘நானும் வரேன்’ என்று அவளும் புறப்பட்டாள். ஒரு அவசர வேலையைக் கவனிக்கக் காலையில் புறப்பட்டு, நேராக சென்னைக்குப் போய் மாலையே திரும்புவதாக அவன் சொன்னதாலும், அடுத்த வாரம் வரும் பிறந்தநாளுக்குப் புடவை வாங்க வேண்டி இருந்ததாலும், சிகப்புக்கல் வளையலில் உதிர்ந்துவிட்ட கல்லை வைக்க நகைக் கடைக்குப் போக வேண்டிய ஜோலி இருந்ததாலும், அவளும் புறப்பட்டாள்—

திட்டமிட்டபடி காலையில் கிளம்பி, பத்து மணிக்கெல்லாம் அவர்கள் சென்னையை அடைந்தார்கள். பனகல் பார்க் அருகில் அவளை விட்டுவிட்டு, அவன் சாஸ்திரி பவனுக்குப் போனான்—

புடவைக் கடையில் ஆசைதீரப் புடவைகளை அலசி இரு நூற்று முப்பது ரூபாய்க்கு ஒரு புடவையைத் தேர்ந்தெடுத்த பின்னர், அவள் பக்கத்திலிருந்த நகைக்கடைக்குப் போனாள்— பத்தரிடம் வளையில் கல் வைக்கச் சொல்லிவிட்டு, 'ஷோ' கேஸிலிருந்து புது தினுசு தோடுகள், செயின்கள், மோதிரங்களைப் பார்வையிட்டு, முடிப்பதற்குள் வளை தயாராகி வந்துவிட்டது.

ரிப்பேருக்கான கூலியை அவள் கொடுப்பதற்கும் அவன் வேலை முடிந்து திரும்புவதற்கும் சரியாக இருக்கவே, இரண்டு பேரும் அங்கிருந்து ட்ரைவின் ஹோட்டலுக்குப் போய் மதிய உணவை முடித்துக்கொண்டார்கள்.

"எஸ். ஈ. சாயங்காலம் நாலு மணிக்கு மேலதான் இருப் பாராம், போன் பண்ணினேன். இப்ப என்ன பண்ணலாம்? மாமாவாத்துக்கு வேணா போகலாமா?"

அவள் முகம் சிணுங்கினாள்—

"வாண்டாம்...ஏண்டி கார்த்தால வந்தவா, வீட்டுக்கு இப்பத் தான் வரதானு சண்டை பிடிப்பா... சாயங்காலமே ஊருக்குப் போயிடப் போறோம்... இந்தத் தடவை மாமாவாத்துக்குப் போகாட்டா என்ன? அவாளுக்குத் தெரியவா போறது?... 'மாமாவாத்துக்கு மட்டும் போகத் தெரியறது, எங்காத்துக்கு வரக் கூடாதா'னு உங்க அத்தை கேட்பா... ஸோ...லெட் அஸ் ஸ்கிப் விஸிடிங் திஸ் டைம்..."

அவன் ஒப்புக் கொண்டான்.

சாப்பிட்டுவிட்டு, ஒரு மணி ஆட்டத்துக்கு, ஒரு ஆங்கிலப் படத்துக்குப் போவது என்றும், பிறகு வேலையை முடித்துக் கொண்டு, ஊருக்குப் புறப்படுவது என்றும் அவன் சொன்னது அவளுக்குப் பிடித்திருந்தது—

படம் முடிந்து வெளியே வரும்போது, மணி மூன்று ஐம்பது.

"தலை வலிக்கிற மாதிரி இருக்கு...காபி சாப்பிட்டுட்டு உங்க டவுன் வேலைக்குப் போலாமா?"

அவனுக்கு சம்மதமில்லை—

"மணி ஆயிடுத்து—நாலு மணிக்கு எஸ். ஈ. ஐப் பார்க்க அபாய்ன்ட்மெண்ட்—வேலை ரொம்ப இல்லை. ஒரு செக் வாங்கிக்கணும், அவ்வளவுதான்... பதினைஞ்சு நிமிஷம் ஆனா

ஜாஸ்தி...கொஞ்சம் பொறுத்துக்கோயேன்... வீ கேன் ஹாவ் த காபி லேட்டர்... என்ன?''

அவள் அரை மனசுடன் தலையை ஆட்டினாள்.

ப்ராட்வேயின் பரபரப்பான அந்தத் தெருவில் இருந்தது, எஸ்.ஈ.யின் அலுவலகம். அவன் டவுன் நெரிசலில் வண்டியைச் செலுத்தி, ஆபீஸ் முன் 'பார்க்' செய்யும்போது, மணி நாலேகால்—

"சுருக்க வந்துடறேன்...ஓ.கே?'' என்றவன் இரண்டு பக்கமும் பார்த்துவிட்டு, நாலே எட்டில் தெருவைக் கடந்து, அந்தப் பக்கத்தில் இருந்த அழுக்கு வெள்ளைக் கட்டிடத்துள் புகுந்து, அவள் கண்களிலிருந்து மறைந்து போனான்.

அந்தத் தெருவில் இருந்த கட்டிடங்களெல்லாம், நிச்சயம் நூறு வருஷங்களைப் பார்த்திருக்கும். ரொம்ப உயரமில்லை— மிஞ்சிப் போனால் இரண்டு, மூன்று மாடி கட்டிடங்கள்தான்— நல்ல சிகப்பு, பிங்க், கோபி, அழுக்கு வெள்ளை என்ற நிறத்தில் ஒன்றோடு ஒன்று ஆசையாய், கையைக் கோர்த்துக்கொண்டு நின்றிருந்தன. வெள்ளைக்காரன் காலத்தில் போட்ட ஓட்டுக் கூரைகள், சில கட்டிடங்களில் சரிவாய் தெரிந்தன—ஒவ்வொன்றும் பெரிய சறுக்கு மரம் போல, பக்கவாட்டில் சரிந்திருந்தது. சில கட்டிடங்களின் முகப்பில் இருந்த மரத்தாலான தோரணங்களில், பச்சை பெயிண்ட் உதிர்ந்துபோய் உள்மரத்தின் நிறம் மங்கலாய் தெரிந்தது.

இரண்டு பக்கமும் தொடர்ச்சியாய் கட்டிடங்கள் இருக்கே, ஒன்றில் தீப்பிடித்துக்கொண்டால் எல்லாமே ஸ்வாஹாதானே?

இடது பக்க ஜன்னல் வழியாக, சுள்ளென்று வெயில் அவள் முதுகில் தைத்தது.

சீ—என்ன வெயில்—

மணி நாலரை ஆகப் போறது—இன்னும் இப்படி கொளுத் தறதே!

ஸ்...காலையிலிருந்து கட்டியிருக்கும் நைலான் புடவை, அவளுக்குக் கசகசத்தது.

கொஞ்சம் நகர்ந்து ஸ்டீயரிங் வீல் அருகில் உட்கார்ந்த வளுக்கு, ஊரில் கமலா சொன்னது ஞாபகத்துக்கு வந்தது—

"எங்க மெட்றாஸ்லே மணி ரெண்டு, ரெண்டரை ஆனா போதும்—ஜில்லுனு பீச் காத்து வீச ஆரம்பிச்சுடும்—அப்புறம்

வெயிலே தெரியாது." என்று அடிக்கடி அவள் சொல்லி இவள் கேட்டிருக்கிறாள்.

பீச்சு காத்து ஜில்லுனு அடிக்குமாமே—மணி நாலரை ஆறது... ஒண்ணுத்தியும் காணோம்...எல்லாம் பொய்—பீத்தல்—

ஊருக்குப் போய், கமலாவை நையாண்டி பண்ண வேண்டும் என்று அவள் நினைத்தாள்.

எத்தனை நகர்ந்து உட்கார்ந்தாலும், வெயில் அவளை விடாமல் துரத்தியது.

இத்தனைக்கும் அவன் வண்டியை மரத்து நிழலில்தான் நிறுத்திவிட்டுப் போயிருந்தான்.

இலையுதிர் காலத்துக்குத் தயாராகிக் கொண்டிருந்த மரங்களில் குச்சிதான் அதிகம் இருந்தது.

அவள் நிமிர்ந்து இடது சாரியில் இருந்த மரங்களைப் பார்த்தாள்—மொத்தம் மூன்று. இரண்டு அசல் மொட்டை—மூன்றாவது இதோ, அதோ என்று தவித்துக் கொண்டிருந்தது.

மரங்களிலிருந்து அவள் கவனம் சாலைக்குத் தாவியது—

ரொம்ப பிஸி தெரு—இரண்டு பக்கமும் இண்டு இடுக்கு இல்லாமல், நிறுத்தியிருந்த கார்களைப் பார்க்கும்போது, இங்கு இவர்களுக்கு பார்க்கிங் செய்ய இடம் கிடைத்ததே அதிருஷ்டம் தான் என்று தோன்றியது.

ஏற்கனவே ஆரம்பித்திருந்த தலைவலி, அந்தச் சாலையில் இப்படியும் அப்படியும் போகும் வண்டிகள் போட்ட சப்தத்தினால் அதிகமாவது போல இருந்தது.

இவர் வரத்துக்கு இன்னும் எத்தனை நாழியாகும்?

அவள் மணியைப் பார்த்தாள். அவன் போய் ஐந்து நிமிடங்கள்கூட ஆகி இருக்கவில்லை.

படிப்பதற்காக எடுத்து வந்த பத்திரிகையை, விசிறி போல முகத்துக்கு நேரே ஆட்டிக் கொண்டே, அவள் இருக்கையில் சற்றே சாய்ந்து உட்கார்ந்தாள்.

சங்கிலித் தொடர்போல ஒன்று பின்னாடி ஒன்றாய் கார், ஆட்டோ, கைவண்டி, சைக்கிள் ரிக்ஷா—எட்ஸட்ரா, கூட்ஸ் வண்டி போல—

சின்ன வயசில் கூட்ஸ் வண்டியைப் பார்க்க நேர்ந்தால், அதன் பெட்டிகளை ஆர்வத்துடன் எண்ணுவது நினைவுக்கு வந்தது.

தனக்கு எதிர்ப்புறமாக வந்துகொண்டிருந்த வண்டிகளை அவள் எண்ணத் தொடங்கினாள்.

ஒன்று, இரண்டு, மூன்று...

அடேடே, இந்தக் காருக்கு என்னாச்சு? பானட் கதவே இல்லையே! ஆக்ஸிடெண்டா? இல்லை, ரிப்பேருக்காகக் கழட்டி இருக்காளா?

அதில் உட்கார்ந்துகொண்டு போகும் இரண்டு ஆம்பிள்ளை களைப் பார்த்தா, மெக்கானிக் மாதிரி தோணலியே...பானெட் இல்லாத கார்லே போறத்துக்கு இவாளுக்கு வெட்கமாக இல்லையா?

பத்து நிமிஷங்களுக்குள் அவள் நாற்பத்தி இரண்டு கார் களை எண்ணி விட்டாள். இதைத் தவிர ஆட்டோ, ஸ்கூட்டர், இத்யாதிகள் வேறு—

பஸ்ஸே காணோமே!

இந்த ரூட்டில் பஸ் வரக்கூடாதுன்னு ரூலோ? இருக்கும்... இருக்கும்...கண்ணுக்கெட்டியவரை ஒரு பஸ்ஸைக்கூட காணோமே...

பார வண்டியை முக்கி முனகிக்கொண்டு இழுத்து வந்த ஒருவன், அவளுக்குக் கொஞ்சம் தள்ளி பாரத்தை ஒரு கையால் பிடித்துக்கொண்டே, முகத்தை வலது பக்கம் திருப்பி, மறுகையால் கன்னத்தில் போட்டுக் கொள்ளுவதை அவள் பார்த்தாள்—

எதுக்காகக் கன்னத்திலே போட்டுக்கிறான்?

எட்டி ஸ்டீரிங் வீல் மேல் சாய்ந்து பார்த்தபோது, இடது பக்க காம்பௌண்ட் சுவருக்குள் சற்று உள்ளே தள்ளி ஒரு தேவாலயம் இருப்பது தெரிந்தது.

தேவாலயம் காம்பௌண்ட் சுவரில் சாய்ந்துகொண்டு சில பிச்சைக்காரர்கள்—

எல்லோரும் குஷ்டரோகிகள் என்பது தெளிவாகத் தெரிந்தது—

ஆலயத்திற்கு வரும் கூட்டம் இன்னும் அதிகரிக்கவில்லை யாதலால், அவர்கள் சுவரில் சாய்ந்த வண்ணம் பேசிக்கொண்டும், சிரித்துக்கொண்டும் இருந்தார்கள்—

இரண்டு வயசுப் பெண் குழந்தை ஒன்று ஒருத்தியின் மடியில் படுத்துக் கிடந்தது. எழுந்து சற்றுத் தள்ளி, பீடி குடித்துக் கொண்டிருந்த ஆளின் கழுத்தைப் பின்புறமாகச் சென்று கட்டிக் கொண்டது.

குழந்தையை அவன் இரண்டு கைகளாலும் பற்றி இழுத்து, முகமோடு முகம் வைத்துக் கொஞ்சுவது அவளுக்குக் குமட்டலைக் கொடுத்தது.

அவன் கைகளில் விரல்களே இல்லை—கால்களில் அழுக்குத் துணி பாண்டேஜ்—அதில் திட்டுத் திட்டாய் ரத்தக் கறைகள்—மூக்கு வாய் எல்லாம் வீங்கி கண்ணாடியாய் பளபளத்தன—இப்படிச் சின்னக் குழந்தையைக் கட்டிக்கறானே—

இவனோட வியாதி அதுக்கு வந்துடாது?

அவளுக்குப் பார்க்கவே பிடிக்கவில்லை—தன் கவனத்தை மீண்டும் சாலைக்குத் திருப்பினாள்.

**தெ**ருவில் திடீரென்று ஜன நடமாட்டம் அதிகரித்து விட்ட மாதிரி இருந்தது—

சின்னச் சின்னக் குழந்தைகள், இரண்டு பேராய், நாலு பேராய் சேர்ந்து வரத் தொடங்கினார்கள்.

ஓ, பள்ளிக்கூடம் விட்டிருக்கிறார்களா?

பச்சை ப்ராக்—வெள்ளை சட்டை—ஸாக்ஸ்—கறுப்பு ஷூ—சோர்ந்து போன முகங்கள்—சில குழந்தைகள், போஷாக்குடன் இருந்தன—சில வத்தலாய் குச்சியாய்—கோரியாய்—

அந்தப் பெண் குழந்தை, ரொம்ப ஸ்வீட்டாக இருக்கா—உப்பின கன்னம், பெரிய கண்—நல்ல நிறம்—பெரியவளானால், பார்க்கிறவர்களை மயக்கித் தள்ளப் போறா!

எல்லாம் ஆங்கிலத்திலே பேசிக்கொண்டு போயின—தெருவின் சந்தடியில் ஒன்றும் தெளிவாகப் புரியவில்லை—

ஒரு பையன் காலி டப்பா ஒன்றை, காலால் உதைத்துக் கொண்டே போனான்—வண்டிகளின் சக்கரங்களில் அந்த டப்பா அவ்வப்போது பட்டு நசுங்குவது, அந்தப் பையனுக்கு ஆனந்தமாக இருக்கவேண்டும்.

எதிர் சாரியில் இரண்டு மூன்று பங்க் கடைகளை பல குழந்தைகள் முற்றுகை இட்டதில், அவள் கவனம் அங்கு தாவியது—

நன்னாரி சர்பத்—

ஐ வாண்ட் மாங்கோ ஜூஸ்—

நல்லா ஐஸ் போட்ட கோக் இருக்கா மேன்?

வசதியுள்ளவை தாக சாந்தி செய்து கொண்டன—இல்லாதது அது பாட்டுக்குப் போனது.

இத்தனை நாழிகை உறைத்த வெயிலின் கொடுமை, சட்டென்று குறைந்து போய், இதமான காற்று வீசத் தொடங்கியது.

திடீரென்று நிறைய வயசுப் பெண்கள் வர ஆரம்பித்தார்கள். எதிர் கட்டிடங்கள், பக்கவாட்டுக் கட்டிடங்கள் என்று ஒவ்வொன்றிலிருந்தும் நிறையப் பெண்களும், கொஞ்சம் ஆண்களும் வெளிப்பட்டார்கள்.

ஆள் நடமாட்டம் தொடங்கிவிட்டதைப் புரிந்துகொண்டு, சொல்லிவைத்தாற்போல, தேவாலயத்துப் பிச்சைக்காரர்கள், தங்கள் தங்கள் இடத்துக்கு வந்து, தகரக் குவளைகளை நீட்டுவதை அவள் பார்த்தாள்—

சாலையில் இறங்கி நடந்த சில பெண்கள் தேவாலயத்துக்குள் போனார்கள். ஓரிருவர் கன்னங்களைக் கையால் தொட்டு வாயில் விரலை வைத்து, முத்தமிட்ட வண்ணம் தொடர்ந்து நடந்தார்கள்—

ஓட்டமும் நடையுமாய் ஒரு பெண் போவதை அவள் பார்த்தாள்—

என்ன அவசரமோ?

பஸ் பிடிக்கணுமோ?

ஆத்தில் வேலை இருக்குமோ?

இல்லை சினிமா, கினிமா போற அவசரமோ?

"அந்த மானேஜர் எமகாதகன், ராணி...டைப் அடிக்கச் சொல்லி விரலை..."

அவளைத் தாண்டி போகும் பெண்களில் ஒருத்தி பேசுவது தெளிவாகக் கேட்டது.

விரலை என்ன பண்ணுவான்?

ஒடிச்சுடுவானா, இல்லை வீங்க வைச்சுடுவானா? சில பெண்களின் தோற்றங்கள் அழுது வடிந்தன—

சில முகங்கள் அலம்பி, பௌடர் போட்டு, தலைவாரி ஜம்மென்று இருந்தன—

இவாளுக்கெல்லாம் என்ன வேலை? பாதி நேரத்தை அரட்டையிலும், கான்டீனிலும் செலவழித்துவிட்டு பாக்கி பொழுதில் இரண்டு பைல்களைப் பார்த்தேன் என்று பேர் பண்ணிவிட்டு, நூற்றுக்கணக்கில் சம்பளத்தை வாங்கிக்கறது தானே! நெஞ்சிலே கையை வைச்சு எத்தனை பேரால் 'நான் வாங்கற சம்பளத்துக்கு உண்மையாய் உழைக்கிறேன்'னு சொல்ல தைரியமிருக்கு?

ஒரு லூகோடர்மா வந்த பெண், அவளைத் தாண்டிப் போனாள்—

உதட்டில், கழுத்தில், கைகளில் வெள்ளைத்திட்டு கண்டிருப்பது புரிந்தது—

ஆரம்ப ஸ்டேஜ்போல இருக்கே—வைத்தியம் பண்ணிக் கறாளோ என்னமோ—முதல்லே வரச்சேயே ட்ரீட்மெண்ட் பண்ணினா வியாதி பரவாதுனு கோகிலா சொன்னாளே! அவளோட நாத்தானருக்கு இப்படித்தான் வந்ததாம்—சித்த வைத்தியம் பண்ணாளாம்—உள்ளுக்கு மருந்து கொடுத்து, மருதாணியை அரைச்சு, வெளுத்த இடங்கள்லே பூசிக்கச் சொல்லி, 'சோப்பைக் கையால் தொடாதே, நைலான் கிட்டே போகாதே—யூ வில் பி ஆல்ரைட்'ன்னாராம் டாக்டர்—இரண்டே மாசத்தில் நல்ல பலன் இருந்ததாமே! இந்தப் பொண்ணுக்கு இது தெரியுமோ, என்னமோ?

அலுவலகத்திலிருந்து வீடு திரும்பும் ஆண்கள் கூட்டமும் இப்போது அதிகரித்துப் போனது.

பிச்சைக்காரர்களின் வருமானமும், பங்க் கடையின் வியாபாரமும்கூட, கூடுதலானதாக அவள் நினைத்தாள்.

பாவாடை மாதிரி புரளப்புரள பேண்ட், தொளதொளனு ஷர்ட், பட்டை பெல்ட், மர ஷூ—மூஞ்சி தெரியாதபடி மீசை, கிருதா, தலை முடி—சே—இன்னார்தான் இன்னது பண்ணிக்கறதுங் கறதே இல்லையா—அந்த மனுஷரைப் பாரு—வழுக்கைத் தலை—ஆனால் கிருதா மட்டும் தாடையை மறைத்துக்கொண்டு—வயசு அம்பது இருக்குமா? இந்த வயசில் கொஞ்சமும் ஸூட் ஆகாம இதென்ன வேஷம்?

அவளைத் தாண்டிப் போன பலரின் கைகளில் சிகரெட்—சிலர் விரல்கள் மஞ்சளாகவும், உதடுகள் கறுப்பாகவும், பற்கள்

ப்ரெளனாகவும் இருந்ததுகூட, அருகில் அவர்கள் நின்று பேசும் போது அவளுக்குத் தெரிந்தது.

ஒரு கர்ப்பிணிப் பெண் தாண்டிப் போனாள். கூடவே ஒரு ஆள்—

கணவனா? இரண்டு பேரும் ஒரே ஆபீசில் வேலை பார்க்கிறாளோ? ரொம்ப செளகரியம்—ஒன்றாக வந்து ஒண்ணா போகலாம்—

"தட் ப்ளவுஸ் வாஸ் ஸோ லோ...அண்ட்..."

ஒரு இளவட்டம் பெருமையாய்ப் பேச அவனுடன் வாயைப் பிளந்தவண்ணம் இன்னும் இருவர் போகிறார்கள்.

எதைப்பற்றி சொல்லுகிறான்?

முதல் நாள் பார்த்த ஒரு பெண்ணைப் பற்றி? சினிமாவைப் பற்றி? இல்லை தான் பணம் கொடுத்து அனுபவித்த ஒரு அனுபவத்தைப் பற்றி?

தெரு ஜகஜகவென்று கூட்டத்தால் நிறைந்து போனதால், அவளால் நிதானமாக ஒருவரையோ, ஒரு பேச்சையோ கேட்க முடியவில்லை.

தலையில் சொட்டை விழுந்த பெண், இன்னொரு பெண்ணோடு போனாள்—

"வழுக்கைனு வாண்டானுட்டாங்க...நைனா முன்னியே சொல்லியிருந்தும் அவுங்க..."

பெண் பார்க்க வந்து வேண்டாம் என்றானா? அடப் பாவமே!—இப்போதெல்லாம்தான் தினுசு தினுசாய் 'விக்' கிடைக்கிறதே, வாங்கி வைத்துக்கொள்ளக் கூடாதோ?

கூட்டமாய் அவளைத் தாண்டித்தாண்டி ஜனங்கள் போனார்கள்—இவன் நல்லவன் மாதிரி இருக்கான்—அவன் மூஞ்சியே சகிக்கலை—இவனுக்கு ஸைட் பர்ன்ஸ் எவ்வளவு அழகா இருக்கு... இந்த மாதிரி மீசை வைச்சுக்கோங்கோனு இவர் கிட்டே சொல்றேன்—காதிலே போட்டுண்டாதானே—ஐ டோண்ட் லைக் இட்... உதட்டிலே கொசகொசனு இருக்கும்ங்கறார்...

ஒரு சிறுமி அழுதுகொண்டே போனாள்—

பேனாவைத் தொலைத்து விட்டாளோ?

இல்லை கீழே விழுந்து அடிபட்டுக் கொண்டாளா?

கம்மென்று செண்ட் மணம் அவளைத் தாக்கியதால் பார்வையை அங்கு திருப்பினாள்—

டொபாஸ் வாசனைதான் இது—நிச்சயம்.

ஒரு அழகான பெண்; திடமான ஆண், கையில் சின்னக் குழந்தை—

வாட் எ லவ்லி ஃபாமிலி. குழந்தைக்கு ஆறு மாசம் இருக்குமா? எங்கே போறா? பீச்சுக்கு? நோ—டிரஸ்ஸைப் பார்த்தா கிராண்டா இருக்கே—மஸ்ட் பீ ஃபார் எ வெட்டிங்—

டாக்ஸி ஒன்று எதிர்ப் பக்கத்திலிருந்து வந்தது. ஜன சந்தடி காரணமாய் அவளுக்கருகில் சில நொடிகள் நின்று புறப்பட்டது.

பின்சீட்டில் ஒரு நடுத்தர வயசு ஆண் படுத்திருப்பதும், முன்னால், பின்னால் உட்கார்ந்திருப்பவர்கள் சிவந்த கண்களுடன் இருப்பதும் தெரிந்தது—

உடம்பு சரியில்லாமல், டாக்டரிடம் கூட்டிப்போகிறார்களா? மனுஷருக்கு நினைவு இருந்தமாதிரி தெரியலையே—ரொம்ப வயாசன மாதிரியும் இல்லை—பாவம்—

அவளுக்குக் கவலையாய் இருந்தது.

தேவாலயத்தின் வாசலில் இருந்த பிச்சைக்காரர்களின் குரல்கள், திடீரென்று ஓங்கி ஒலித்து அவள் கவனத்தைக் கவர்ந்தன—

புதிதாக வந்த இரண்டு பிச்சைக்காரர்களைப் பார்த்து, குழந்தையைக் கட்டி விளையாடினவன், கத்திக்கொண்டிருந்தான்.

ஏன் கத்துகிறான்?

என்ன சொல்லித் திட்டுகிறான்?

ஜன்னல் வழியாகத் தலையை சற்றே நீட்டி அவள் கேட்க முற்பட்டபோது, அவன் அரக்க பரக்க வந்து சேர்ந்தான்.

கதவைத் திறந்து உள்ளே அமர்ந்து, "ஸாரிம்மா—ரொம்ப நாழியாயிடுத்து இல்லே? நான் என்ன பண்றது? எஸ்.ஈ. மீட்டிங்கில் இருந்தார். என் கார்டை உள்ளே அனுப்பினதும், என்னை உள்ளே வரச்சொல்லி ஊர் கதையெல்லாம் பேசிண்டு இருந்தார். பாதிலே எப்படி எழுந்து வரது? ஐ ஃபெல்ட் ஸோ பாட். செக் கொடுத்தார்.

பெரிய அமௌண்ட்...நியர்லி ஸிக்ஸ்டி தௌஸன்ட்...அப்புறம் காபி வரவழைச்சி பேச ஆரம்பிச்சுட்டார், ஐ ஆம் ஸோ ஸாரி...தலை வலி ஜாஸ்தியாயிடுத்தா? வேர்த்துதோ? இட் மஸ்ட் ஹாவ் பீன் டெரிபிள்...ஐ ஆம் ஸாரி..."

சொன்ன நேரத்துக்கு ஐந்து நிமிஷம் தாமதமாக வந்தாலும், பல மணி நேரங்களுக்கு அதையே சாக்காகக் கொண்டு முகத்தை இரண்டு முழங்களுக்கு அவள் தூக்கி வைத்துக்கொள்ளுவது, அவன் அடிக்கடி அனுபவப்பட்ட சமாசாரமாதலாலும், மனைவியை நிஜமாகவே வெகு நாழிகை வெயிலில் காக்க வைத்து விட்டதை உணர்ந்ததாலும், அவன் பரிதவித்துப் பேசினான்—

பிச்சைக்காரர்களின் சண்டை பெரிதாகி கைகலப்பு தொடங்கி விட்டது—அவர்களைச் சுற்றி கூட்டம் அதிகமாகிப் போய், அவளுக்கு அங்கு நடப்பது ஒன்றும் தெரியாமல் போனதால் தலையைத் திருப்பி கணவனைப் பார்த்து, 'ஓ—தட் ஈஸ் ஆல் ரைட்' என்று மட்டும் சொல்லிவிட்டு, மீண்டும் இடுக்கு வழியாக சண்டை தெரிகிறதா என்று பார்க்கத் தொடங்கினாள்.

*— ஆனந்த விகடன், 1977*